உ
சிவமயம்
ஓம் சரவணபவ



# திருச்செந்தில் இலைவிபூதிமகிமை

ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம்,
திருச்செந்தூர்.



1961

[விலை 12 ந.பை

உ

திருமுருகன் துணை



திருச்செந்தில்,

# இலைவிபூதி மகிமை

( நான்காம் பதிப்பு )

தொகுத்தவர் :

திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
முன்னாள் நிர்வாக அதிகாரி.

வெளியிடுபவர் :

திரு. R. ராமய்யா நாயுடு அவர்கள் B. A.,
நிர்வாக அதிகாரி.

ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம்,
திருச்செந்தூர்.



ஸ்ரீ மீனாக்ஷி அச்சகம், தென்காசி.

1961

உ

ஓம் குகாய நம.

# திருச்செந்தூர்,

# ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம்

## தர்மகர்த்தர் குழு (1961)

---

திரு. I. A. சிதம்பரம் பிள்ளை M. A., M. L. C.,

தலைவர்.

திரு. S. V. வேதமூர்த்தி முதலியார்,

திரு. V. K. R. சுப்பிரமணிய ஆதித்தன்,

திரு. S. சங்கிலி M. L. A.,

திரு. A. சின்னஅழகிரிசாமி நாயுடு,

தர்மகர்த்தர்கள்.

---

**திரு. R. ராமய்யா நாயுடு B. A.,**

நிர்வாக அதிகாரி.



உ

திருமுருகன் துணை

# திருச்செந்தில் இலைவிபூதி மகிமை.

மண்ணுல கத்தினில் பிறவி மாசற
எண்ணிய பொருளெலாம் எளிதில் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம். (1)

நங் கடம் பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம் பைத் திருக்கரக் கோயிலான்
தன் கடன் அடி யேனையும் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே. (2)

"வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்குமே—
செந்தினகர்ச்
சேவகா! என்று திருநீ(று) அணிவார்க்கு
மேவவா ராதே வினை" (3)

சகல வேதங்களின் கருத்தாவாகிய செந்திற்பிரான், ஆணவம், கன்மம், மாயையாகப் பிரதிபலித்த, சூரபன்மன், அவன் தம்பிமார் சிங்கமுகன், யானைமுகன், ஆகிய அசுரர்களை வதைத்துவிட்டு, கடல் அலைகள் அழிவதுபோல் தன்னையடையும், மானிடர்களின் தீவினைகளும் அழிந்துவிடும் என்பதை விளக்க நின்றவன்போல், கடற்கரையாண்டி, ஜயந்திபுரம் என்ற திருச்செந்தூரில் நவரத்னமயமான அரியாசனத்தில் அமர்ந்து கொண்டு, தர்பாரில் செங்கோல் பிடித்து, சர்வலோகங்களுக்கும் ராஜாதிராஜனாக விளங்கிவரும் சந்தர்ப்பத்தில், அவருடைய

பெருமையைப் போதிக்கின்ற சகல வேதங்களும், ஒன்று சேர்ந்து, அந்தக் குமரக்கடவுளினுடைய மகிமையை விளக்க, பன்னீர் மரங்களாக இத்தலத்தில் தோற்றங் கொண்டுள்ளன.

ஆக இப்பன்னீர் மரங்களின் இலைகளும், வேத மந்திர சக்தியை உடையனவாயுள்ளன. விசாகனுக்கு விபூதி அபிஷேகம் செய்து அந்த விபூதியைப் பன்னீர் இலையில் வைத்து சம்பந்தப்படுத்துவதால், அந்நீறு வேத மந்திர சக்தியைப் பெறுகிறது.

இவ்வாறு சக்திபெற்ற இலைவிபூதியைக் கண்ட மாத்திரத்தில் சகலவித ரோகங்களும், பூதபைசாசங்களும் வெகு தூரத்திற்கப்பால் ஓடி விலகி விடுகின்றன. இக் கருத்தை வெகு அழகாக, வடமொழியில், ஸ்ரீ ஆதிசங்கரர் தான் பாடியுள்ள, திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கத்தில் சொல்லுகிறார். தமிழ் ஒன்றே அறிந்தவர்கள் ஓதிப்பயன்பெறும் பொருட்டு, சீரிய புலமை வாய்ந்த கோவை கவியரசு, வித்வான், கு. நடேசக் கவுண்டரவர்கள் தமிழில் கவியாக மொழிபெயர்த்துத் தந்திருக்கின்றார்கள். மேலே சொல்லப்பட்ட கருத்தை இக்கவியில் காண்க.

" கண்டால்நின் இலைநீறு கைகால் வலிப்புக்
காசம் கயம் குட்டம் முதலான நோயும்
விண்டோடுமே பூத பைசாசம் யாவும்
வினையாவுமே செந்திலமர் தேவதேவே "

**இலைநீற்று மகிமை வரலாறு:-**

முன் காலத்தில் விஸ்வாமித்திர முனிவர், ஸ்ரீ இராம பிரான் மூலமாக தாடகை என்ற அரக்கியை வதைசெய்து, முனிவர்களின் சங்கடத்தை நீக்கினர் என்பது இராமா

யணத்திலிருந்து தெரியக்கிடக்கிறது. பெண்டிர் எவ்வளவு கொடியவராயிருந்தாலும் பெண்வதை கூடாதென்பது சாத்திரம். ஸ்ரீ இராமரும் விஸ்வாமித்திர முனிவரும் சாஸ்திரத்தை மீறிய குற்றவாளிகளாகிருர்கள். அதற்காக ஸ்ரீ இராமர் சீதையை விட்டுப்பிரிந்து கொஞ்சநாள் துக்கத்தை அனுபவிக்கலாயினர். முனிவராகையால் விஸ்வாமித்திரர் கீழ்க்கண்டபடி வேதனையடைந்தார்,

காச நோயால் பீடிக்கப்பட்டு விஸ்வாமித்திரர், பல இடங்களுக்குச் சென்றும் குணமடையவில்லை. இந்நோய் நீங்க மருந்தில்லை என்று எல்லோராலும் கைவிடப் பட்டார். ஒரு நாளிரவு ஸ்ரீ இராமச்சந்திரமூர்த்தியே கனவில், இம்முனிவருக்குக் காட்சி கொடுத்து ஜெயந்திபுரம் என்ற தலம் சென்று ஒரு மண்டலம் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமியைத் தோத்திரம் செய்யென்றருளினர். முனிவரும் அவ்வாறே செய்து வரும்போது ஒரு நாள் வைகறையில் செந்திற்குமாரன் வயோதிக வடிவு பூண்டு, முனிவர் முன் தோன்றி "இந்த விபூதியைப் பூசிக்கொள்க, கொஞ்சம் உள்ளுக்கும் அருந்துக" என்று கட்டளையிட, முனிவரும் அப்படியே செய்தார். உடனே காசநோய் கணப்பொழுதில் பறந்தோடியது. முனிவர் ஆடினர். பாடினர். தன்முன் தோன்றிய வயோதிகர் ஸ்ரீ சுப்பிரமணியசுவாமியே எனத் தீர்மானித்துக் கனிந்து வணங்கினர். பிறகு முனிவர் சர்வலோக நன்மையைக் கருதி "எந்தாய்! காசம், கயம் முதலிய வியாதிகளால் பீடிக்கப்பட்டோரும், உன் சந்நிதியில் வந்து ஒரு மண்டலத்துக்குக் குறையாமல் உன்னை வழிபட்டு பன்னீர் இலையின் விபூதியை நிறையப் பூசி உள்ளுக்கும் சிறிது உண்பார்களானல் சகல வியாதி களிலிருந்தும் விடுபட்டவர்களாகி அழகான மேனியுடன்

சிறப்பின்ப வாழ்வுவாழவேண்டும்" என்ற வரம் கேட்டுக் கொண்டார். அப்படியே கொடுத்தருளினுர் மகானுள்ளம் உறைறவோனுகிய மயில்வாகனன்.

காசநோயுற்ற ஸ்ரீ ஆதிசங்கராச்சாரிய சுவாமிகளும், செந்திலாதிபன் மீது "புஜங்கம்" என்ற பாமாலை பாடி இலைவிபூதி தரித்தும் உட்கொண்டும் அந்நோயிலிருந்து விடுதலை பெற்றுர்.

சுமார் முன்னூறு ஆண்டுகட்கு முன் செந்திற்குமாரன் கனவிலிட்ட கட்டளைப்படி, திருச்செந்தூர் மேலக் கோபுரம் திருவாவடுதுறை ஆதீன மடத்தைச் சேர்ந்த **ஸ்ரீலஸ்ரீ தேசிகமூர்த்தி சுவாமி தம்பிரானவர்களால்** நிர்மாணிக்கப்பட்டது. இறைவனுல் இட்டபணியை நிறைவேற்றத் தம்பிரானவர்களிடம் போதிய பொருளில்லை. அவனருள் மட்டுமிருந்தது. திருப்பணியைப் பரபரப்புடன் ஆரம்பித்தார்.

கூலியாட்களுக்கு கூலிக்குப் பதிலாக, செந்திலாதிபன் இலைவிபூதியை, வேலையைவிட்டு வீட்டுக்குப் போகும் போது கொடுத்து தூண்டுகை விநாயகர் கோவிலைத் தாண்டிப்போய்த் தான் பெற்றுக்கொண்ட விபூதிப் பிரசாதத்தைத் திறந்து பார்க்கவேண்டுமென்று பணித்தார் தம்பிரானவர்கள். கூலியாட்களும் அப்படியே செய்தனர். கையைத் திறந்து பார்க்குங்கால் தத்தம் உழைப்புக்குத் தக்க ஊதியமிருப்பதை ஒவ்வொருவரும் கண்டு மகிழ்ந் தனர்.

தற்காலத்தில் எல்லா நோய்களுக்கும் கைகண்ட மருந்தாயுள்ள "பென்சிலின்" என்ற மருந்திலும்

நீற்றின் சம்பந்தமுளதென்று மருத்துவ நிபுணர்கள் சொல்லுகின்றனர்.

குமரகுருபர சுவாமிகள் சரித்திரத்தைக் கவியாகப் பாடிய, திரிசிரபுரம் மகாவித்வான் **மீனுக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்** திருச்செந்தூர் ஆலயத்தில் அர்ச்சகர்கள், இலைவிபூதியின் மகிமையை எடுத்துச்சொல்லி, பக்தர்களுக்கு அப்பிரசாதத்தை வழங்கும் காட்சியைக் குமரகுருபரர் கண்டபடி, அழகாக எடுத்துப் பாடியுள்ளார்கள். அதன் மகிமையைக் காண்க.

"இலையமில் குமரவேள் முன் வணங்கு வார்க்
கென்றுந்துன்ப
மிலையடு பகை சற்றே னுமிலை படுபிணி நிரப்பு
மிலையளற்றுழன்று வீழ்தலிலை பலபவத்துச்
சார்பு
மிலையென விலை விபூதி யெடுத்தெடுத் துதவல்
கண்டார்"

அந்தமிலா அதிபன் குமரனை வணங்கி இலைவிபூதி தரிப்போர்க்குத் துன்பமில்லை, இயம பயமில்லை, பிணி வறுமையில்லை, நரகவேதனையில்லை, பிறவிப் பிணியில்லை என்பது கருத்து,

### இலைவிபூதியானது சத்தியத்தையும் கீழ்ப்படிதலையும் ஆன்மாக்களிடம் நிலைபெறச் செய்கிறது.

இத்தலத்தில் திருவிழாக்கள் நடைபெறும்போது ஓர் சுப தினத்தன்று தேவஸ்தான சிப்பந்திகள் யாவரும் சண்முக விலாசத்தில் கூடுவார்கள். அவ்வமயம் ஆலய

நிர்வாக அதிகாரி அவர்கள் எல்லாச் சிப்பந்திகளுக்கும் மற்றும் அங்கு குழுமியிருக்கும் அன்பர்களுக்கும் இலை விபூதி வழங்குவது தொன்று தொட்டு ஏற்பட்டு நடந்து வருவதோர் பழக்கம். அவ்வாறு அதிகாரி அவர்களிட மிருந்து இலைவிபூதிப் பிரசாதம் வாங்கும் சிப்பந்திகள் ஒரு விதமான உயர்வு தாழ்வுமின்றி பயபக்தியுடன் வாங்கிக் கொள்ளுவார்கள். அப்படி இலைவிபூதி கொடுப்பதின் நோக்கம் யாதெனில் சிப்பந்திகள் யாவரும் உண்மை யுடனும் ஊக்கத்துடனும் செந்திலாதிபனுக்குத் திருவிழாவில் தொண்டாற்றவேண்டு மென்பதுவே. மேலும் செந்திலாண்டவன் கைங்கரியங்களைச் செவ்வனே நடத்த நியமிக்கப்பட்டுள்ள அதிகாரி அவர்களிடம் சத்தியத்துடனும் கீழ்ப்படிதலுடனும் யாவரும் நடந்து கொள்ளவேண்டுமென்ற கட்டுப்பாட்டையும் இலைவிபூதி ஏற்படுத்துகிறது.

## பன்னீர் இலை சம்பந்தமாய் சில குறிப்புகள்:

*1.* விபூதியை உபசாரமாய்க் கொடுக்கிற சம்பிர தாயம்:-

திருவாவடுதுறை, திருப்பனந்தாள் முதலிய இடங் களில் பண்டாரச் சன்னிதி முதலியவர்கள் தம்மையும் நடராஜப் பெருமானையும் தரிசனம் செய்கிறவர்களுக்கு இலைவிபூதி கொடுத்து வருகிறுர்கள்.(இலை: பன்னீர் இலை)

*2.* பன்னீர்ப் பூவிலுள்ள சாந்த குணசக்தி பன்னீர் இலையிலும் தங்கியிருக்குமென்பது ஊகிக்கக்கூடியது. அது பரிசத்தாலும் வேறு வகையாலும் உடலுக்கு நுண்மையான சில நன்மைகளைக் கொடுக்கிறது என்பது ஆன்றோர் கருத்து.

3. பத்திரத்திற் சிறந்தது துளசி, வில்வம் போன்ற உயர்ந்த பத்திரம். சிவபூஜைக்கு இன்றியமையாததாய் உயர்ந்தது பன்னீர் இலையுமாகும்.

4. பன்னீர் இலையில் காணப்படும் 12 நரம்புகள் முருகனது 12 திருக் கரங்களையும் நினைவூட்டுவதாய் இருக்கிறது.

5. விபூதியைப் பத்திரமாய் வைத்துக்கொள்ளுவது மல்லாமல் விபூதியிலே நற்கந்தத்தை விரவும் சுபாவமும் உள்ளது.

6. பக்தர்கள் இலைவிபூதியோடு இலையையும் சேர்த்துச் சாப்பிட்டு நோயினின்றும் குணமடைகிறார்கள்.

7. செந்திலோடு கலந்த நெடுநாளைய வழக்கமாகும்.

8. வெகுகாலம் பிரசாதமாக வைத்து உபயோகிக்கச் சிறந்த சாதனம்.

9. செந்திலில் வேதங்களே பன்னீர் மரங்களாகத் தோன்றி விளங்குவதால் பன்னீர் இலையும் வேத மந்திர சக்தியைப் பெற்றுத் தன்னுடன் சம்பந்தப்படும் விபூதியும் பெறும்படி செய்கிறது.

" கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வீரே யாமாகில்
தங்கா வினைகளும், சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே"-திருமந்திரம்

**(திருநீறு)** தன்னை உள்ளன்புடன் அணிந்து கொள்பவர்களுக்கு எல்லாவிதச் செல்வத்தையும் கொடுத் தலினாலே அதற்குப் பூதி என்னும் பெயரைச் சொல்

வார்கள். பூதி-ஐசுவரியம், செல்வம் (வி—மேலான, பூதி-ஐசுவரியம்) விபூதி என்பதற்கு மேலான ஐசுவரியம் என்பது பொருள். ஐசுவரியம்—ஈசுவர சம்பந்தம். எனவே மேலான ஈசுவர சம்பந்தம் செய்வது விபூதி. மக்கள் எல்லோராலும் விரும்பப்படுவது இன்பம், இன்பத்தைத் தருவது செல்வம் பொன் முதலிய செல்வங்கள் நிலைபேறில்லாது அழிவனவாயும், பெரும்பாலும் துன்பத்தையே தருவனவாயுமிருக்கின்றன. எது அழியாமல் ஒரே தன்மையாய் நின்று பிற பொருள்களெல்லாம் அழிந்தொழிவன என்று உணர்த்துமோ அதுவே செல்வமாகும். விபூதி "எல்லாப் பொருள்களும் (உயிர்கள் எந்த இன்பத்தையும் அனுபவிப்பதற்குக் கருவியான) உடம்பு முதலியனவும் வெந்து நீருவன" என்று உணர்த்தித்தான் பிறிதொன்றினாலே அழியாத தன்மையுடையதென்னும் தத்துவக்கருத்தை உணர்த்துவதாதலால் "**தத்துவ மாவது நீறு, பாக்கியமாவது நீறு, சத்தியமாவது நீறு, உண்மையில் உள்ளது நீறு**" என்று தமிழ் வேதம் கூறுகிறது. விபூதி தன்னை அணிந்தவர்களையேயன்றி, நினைத்தவர்களைக்கூடக் காக்கும் தன்மையுடையதால் "**மந்திரமாவது நீறு**" என்னும் திருவாக்கு எழுந்தது. மந்—நினைப்பவர்களை, ரம்—காப்பது: மந்திரம்.

மக்களுக்கு தமது யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வ நிலையாமை உணர்வதைவிடச் சிறந்த ஞானமும், அந்த ஞானத்தை அடைதலைவிடச் சிறந்த பேறும் இல்லை. தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார், ஞானம்என்ற தலைப்பிலே நிலையாமை என்ற அதிகாரத்தை முன் வைத்த கருத்து, நிலையாமையை உணர்தலே சிறந்த ஞானம் என்பதை விளக்கவேயாகும். விபூதியினாலே பல

தத்துவக் கருத்துக்களும் தெய்வீகத் தன்மையும் விளங்கு கின்றது. இவ்விபூதி மிகுந்த மெய்யன்போடு அணியப் பட்டால் ஆன்மாவை மெல்ல மெல்ல ஆணவத்தினின்றும் நீக்கி தீவினையில் மனத்தைவிடாமல் தடுக்கும். மனிதர் களினும் சிறந்தவானவர்களாலும் போற்றப்படுவதால் "**வானவர் மேலது நீறு**" என்றும், விபூதியணிந்த திருமேனி "காண இனியதாகி" "கவினைத்தருவதாக" இருப் பதற்கு அதனிடத்துள்ள அழகே காரணமாதலால் "**சுந்தர மாவது நீறு**" என்றும், பூச இனியதாயும், பேச இனிய தாயும், எண்டிசைப்பட்டபொருளார் ஏத்தும் தன்மை யுடையதாயும் இருத்தலால் எல்லோராலும் "**துதிக்கப் படுவது நீறு**" என்றும், எத்திறமக்களாலும் விரும்பப் படுகின்ற பாக்கியமாக இருந்து தன்னைப் பூசுவார்க்கு இனியதாகிப் பயிலுமாறு செய்வித்து, பலவகை நோய் களையும் நீக்கி, எல்லா விருப்பங்களையும் தந்து "சித்தி தருவதாகி" உலக இன்பத்திலே ஒரு சிறிதும் பயனில்லை என்னும் உணர்ச்சியை வருவித்துப் பத்தியை விளைவித்து அதனால் இறைவன் திருவடிப்பேற்றைத் தருவதாய முத்தி தந்து தன்னை விரும்புமாறு செய்யும் திறம் நோக்கித் "**தந்திரமாவது நீறு**" என்றும் சைவசமயிகளைத் தவிர பிற சமயிகளும் நோய் முதலிய நீங்குவதற்கு மந்திரித்து விரும்பி அணிவது கருதி "**சமயத்திலுள்ளது நீறு**" என்றும் **திருஞானசம்பந்தர்** திருவாய் மலர்ந்தருளினர்.



கைலேயனைய கந்தமாதன பருவதத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ முருகப்பெருமானது இலேவிபூதிப் பிரசாதத்தைப் பக்தர்கள் மெய்யன்புடன் சடாக்ஷரமந்திரம் ஓதி அணிந்து, உண்டு இறைவனை வாழ்த்தி வணங்கி எல்லா நலன்களேயும் எய்திப் பேரானந்தப் பெருவாழ்வடைக.

**வையம் நீடுக மாமழை மன்னுக**
**மெய் விரும்பிய அன்பர் விளங்குக**
**சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக**
**தெய்வ வெண் திருநீறு சிறக்கவே.**



உ

சிவமயம்.

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

## திரு ஆலவாய்த் திரு நீற்றுப் பதிகம்

இரண்டாந் திருமுறை – பண் – காந்தாரம்

பரையின் வரலாறு – திருச்சிற்றம்பலம்.

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே. 1

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையிலுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

அருத்தம தாவது நீறு அவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண்ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 6

எயிலது அட்டது நீறு இருமைக்கு முள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத்தால வாயான் திருநீறே. 7

இராவணன் மேவது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆல வாயான் திருநீறே, 8

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் ஆல வாயான் திருநீறே. 9

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங்கூட
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளா ரேத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆலவாயான் திருநீறே. 10

ஆற்ற லடல்விடையேறும் ஆலவாயான் திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்.

# திருச்செந்தூர்,
# ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானத்தில் கிடைக்கும்
# வெளியீடுகள்.

---

1. திருச்செந்திலாண்டவன் கோயில் மகோத்சவ
   விளக்கம் ரூ. ...25
2. கந்தபுராண வரலாறு ...25
3. திருமுருகன் பிள்ளைத் தமிழ்த்திரட்டு ...36
4. திருச்செந்தூர் வள்ளிநாயகி பிள்ளைத் தமிழ் ...50
5. திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கம் ...20
6. திருச்செந்தில் இலைவிபூதி மகிமை ...12
7. செந்திற்குமாரன் பாமாலைகள் ...12
8. திருச்செந்தூர் நிரோட்டக யமக அந்தாதி ...50
9. திருச்செந்தூர் நொண்டி நாடகம் ...56
10. திருமுருகாற்றுப்படை ...75
11. திருச்செந்தூர் கோயில் கும்பாபிஷேக மலர்
    (புகைப்படம் இல்லாமல் ...50
12. ஷை (புகைப்படத்துடன் ...00
13. திருவேரகம் ஸ்ரீ சுவாமிநாத சுவாமி
    பிள்ளைத்தமி ...-00
14. சமய வளர்ச்சி நூல்கள் ...-02
15. திருப்பாவை வியாக்பாதங்கள் ...-50
16. தேவாரம் அடங்கன் முறை ...-00

மேலே கண்ட புத்தகங்கள் தேவஸ்தானத்தில் கிடை...ும்.
தபாற் செலவு தனி.

ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம், திருச்செந்தூர்.

R. ராமய்யா நா... ...ஏ.,
நிர்வாக அதிகாரி.

ஸ்ரீ மீனாக்ஷி பிரஸ், தென்காசி.